6th September 1960]

III.—ANNOUNCEMENTS—*cont.*

(2) SITTINGS OF THE HOUSE.

MR. SPEAKER : நாளை மாலையும் சபை உட்காரவேண்டும் என்று எல்லா அங்கத்தினர்களும் கேட்டுக்கொண்டதின் பேரில், கட்சித் தலைவர்களும் நானும் அதற்கு ஒப்புக் கொண்டிருக்கிறோம். ஆகையினாலே நாளை மாலை 3 மணி முதல் 5½ அல்லது 6 மணி வரைக்கும் இந்தச் சபைக் கூட்டம் நடக்கும். நாளை மாலை தலைவர்கள் மட்டும் பேசப்போகிறார்கள். கனம் அங்கத்தினர் ஸ்ரீ. சின்னதுரை அவர்கள் ½ மணி நேரமோ, அல்லது ஸ்ரீ. கல்யாணசுந்தரம் அவர்கள் ¾ மணி நேரமோ பேசலாம். பிறகு மற்ற தலைவர்கள் பேசலாம். மாலையில் நேரம் இருந்தால் இன்னும் இரண்டு அங்கத்தினர்கள் பேசலாம் என்பதையும் இந்தச் சபைக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதற்காக இப்பொழுது பேசாமல் இருக்கவேண்டாம். நாளை மாலையில் நேரம் இருந்தால் இரண்டு அங்கத்தினர்கள் பேசலாம். இல்லாவிட்டால் தலைவர்கள் பேசவேண்டுமென்று சொல்லிக்கொள்ளுகிறேன்.

VI.—GOVERNMENT MOTION—*cont.*

(2) DRAFT OUTLINE OF THE THIRD FIVE-YEAR PLAN—*cont.*

* SRI S. RAMASWAMY THEVAR : கனம் சபாநாயகர் அவர்களே, நாம் இப்பொழுது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றி பேசிக்கொண்டிருக்கிறோம். நானும் அதைப் பற்றி ஓரிரண்டு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இரண்டு திட்டங்களை தீட்டிவிட்டோம், அதிலிருந்து நல்ல பலனை அடைந்து விட்டோம் என்பதற்காக மூன்றாவது திட்டத்தை நாம் இன்று நெருங்குகிறோம். முதலாவதாக நாட்டிலே உணவு உற்பத்தி பெருகி வெளி நாட்டிலிருந்து உதவி இல்லாமல், வெளி நாட்டிலிருந்து இறக்குமதி இல்லாமல் இதுவரையில் நாம் இருந்தோமா என்று பார்த்தால், இல்லை. நாட்டிற்கு முக்கியமாக வேண்டியது உணவு. உணவு உற்பத்தி செய்பவர்கள் விவசாயிகள். நாட்டிலே உணவு பற்றாக்குறை இருந்துவருகிறது. இரண்டு திட்டங்கள் தீட்டியும்கூட உணவு உற்பத்தியை நாம் பெருக்க முடியவில்லை. வெளி நாடுகளுடைய உதவியை நாடிக் கொண்டிருக்கிறோம். அந்தத் திட்டங்களிலுள்ள குறைகளை போக்க வழிவகை செய்யாமல் அதே மாதிரி நாம் இன்னும் திட்டங்களை தீட்டிக்கொண்டே போவோமானால் நாடு முன்னேற முடியாது என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்று தஞ்சை ஜில்லாவில் தீவிர சாகுபடி முறை கையாளப் படுகிறது. மக்களிடையே தீவிரப் பிரசாரம் செய்யப்படுகிறது. ஏக்கருக்கு 150 பவுண்டு அமோனியம் சல்பேட் போடவேண்டும், அப்பொழுதுதான் பயிர் நல்ல பலனை தரும் என்று சொல்லப் படுகிறது. ஆனால், கிடைப்பதோ 50 பவுண்டுதான். அதற்குமேல்